4 பக்கம் விலை 0—1—0

JANASAKTHI
Phone 85777

இலங்கையில் 10 சதம்

## சென்னையில் குடி தண்ணீர் பஞ்சம்

சென்னை, ஏப். 14—

சென்னை நகருக்கு குடிதண்ணீர் தரும் 'ரெட்ஹில்ஸ்' ஏரியில் இன்றைய நீர் மட்டம் 28·43 அடி, கடந்த ஆண்டு இதே நாளைய நீர் மட்டம் 35·80 அடி.

குடி தண்ணீர் பற்றுக்குறை அதிகரித்துள்ளது. நிலைமைக் கடுமையாகு முன்னர் நடவடிக்கையெடுக்க வைக்க மாபெரும் கிளர்ச்சி அவசியம்.

ஜனசக்தி

கம்யூனிஸ்ட் கட்சி தின இதழ்
COMMUNIST TAMIL DAILY

## மைசூர் சில்க் மில்கள் மூடப்படுகின்றன

பங்களூர், ஏப். 14—

மார்க்கெட் நிலவரம் அபிவிருத்தியடையும்வரை மைசூர் ராஜ்யம் முழுவதும் உள்ள சில்க் மில்களை மூடுவதென மைசூர் சில்க் உற்பத்தியாளர் சங்கம் முடிவு செய்துள்ளது.

இதன் காரணமாக பல்லாயிரம் தொழிலாளிகள் வேலையில்லா திண்டாட்டத்தில் தள்ளப்படுகின்றனர்.

விலைவாசிகள் வீழ்ச்சியடைய தொடங்கியதும் மார்ச் 1ம் தேதி முதல் மேற்படி மில்கள் தற்காலிகமாக மூடப்பட்டன என்பது குறிப்பிடத்தக்கது.

மலர் 8 | சென்னை 15—4—'52 செவ்வாய் ★ வெளியூர் 16—4—'52 புதன் | இதழ் 124

# திரு - கொச்சி மக்களின் மாபெரும் வெற்றி!

## தோழர் ஸ்ரீகண்டன்நாயர் உண்ணுவிரத முடிவு

## காங்கிரஸ் சர்க்காரின் ஜனவிரோதப் போக்கு தடுத்து நிறுத்தப்பட்டது

### ஐக்கிய முன்னணியின் அரிய சாதனை!

திருவனந்தபுரம் ஏப்ரல் 13—

திருவாங்கூர் கொச்சி இராச்சிய சர்க்காரின் தொழிலாளருக்கு விரோதமாக அனுஷ்டிக்கும் கொள்கையை எதிர்த்து உண்ணுவிரத மிருந்த புரட்சி சோஷலிஸ்ட் கட்சித் தலைவர் தோழர் ஸ்ரீகண்டன் நாயர் இன்றிரவு உண்ணுவிரதத்தை கைவிட்டார்.

தோழர் நாயர் சர்க்காருக்கு சமர்ப்பித்த மகஜரில் கிளப்பிய பிரச்சினைகளையெல்லாம் பைசல் செய்ய சர்க்கார் இணங்கியதின் விளைவாகவே போராட்டம் முடிவுற்றது.

உண்ணுவிரதம் வெற்றியடைவதற்குக் காரணம் தி—கொ இராச்சியம் பூராவிலுமுள்ள தொழிலாளிகள் அனைவரும் கட்சி பேதமின்றி பொதுவேலை நிறுத்தம் செய்து இராச்சியத்தின் எட்டுத் திசைகளிலிருந்தும் ஊர்வலங்களை நடத்திச் சென்று திருவனந்தபுரம் தனது சரித்திரத்திலேயே கண்டிராத பிரம்மாண்டமான ஆர்ப்பாட்டம் செய்ததாகும். தொழிலாளரின் இந்தப் போராட்டத்துக்கு பொது மக்களும், விவசாய மக்களும் ஒருமுகமாக ஆதரவளித்தனர். இந்த ஒற்றுமையை சாதிப்பதில், திரு—கொச்சி ஐக்கிய முன்னனி ஸ்தாபனமும், கம்யூனிஸ்ட் கட்சியும் பிரதான பாத்திரம் வகித்தன.

உண்ணுவிரதம் முடிக்கும் பொழுது சர்க்கார் காரியாலயத்தின் முன் பிரம்மாண்டமான பொதுஜன ஆர்ப்பாட்டம் நடந்தது. ரயில்வே, பஸ், கால்நடை பிரயாணமாக பல்லாயிரக்கணக்கான தொழிலாளிகள் பல ஊர்களிலிருந்து தலைநகருக்கு வந்து ஆர்ப்பாட்டத்தில் கலந்தனர்.

ஊர்வலம் சமாதானமாக நடந்தது. கம்யூனிஸ்ட் கட்சியின், ஐக்கிய முன்னணியின் பலத்தையும், ஸ்தாபன சக்தியையும், மக்களின் மலைபோன்ற ஆதரவையும் நிதர்சனப்படுத்திற்று. சர்க்கார் மக்களிடமிருந்து ஒதுக்கப்பட்ட நிலைமையை உணர்த்திற்று. ஆர்ப்பாட்டங்கள் வெகுஜனரீதியில் பொங்கியெழுந்ததால் சர்க்காரோ, போலீசோ தலையிட தைரியங் கொள்ளவில்லை.

தேர்தல் காலத்தில் திரு-கொச்சி மக்கள் இந்திய மக்களுக்கு வழிகாட்டி முன்சென்றது, உலகப் பிரசித்தம்.

அதேபோல, தேர்தலுக்குப்பின் தோற்ற கட்சி சதிசெய்து மந்திரி சபை அமைத்தபின் தொழிலாளிகளின், விவசாயிகளின், பொதுமக்களின் ஒற்றுமையைப் பலப்படுத்தி, ஐக்கிய முன்னணியை மக்களுடன் இணைத்து இயங்க வைத்து, ஸ்தூலமான பிரச்சினைகளில் மக்களைத் தட்டியெழுப்பி காரியத்தில் ஈடுபடச் செய்து பிற்போக்கு மந்திரி சபையின் கொள்கையைப் பின்னடையச் செய்யும் பணியிலும் வழிகாட்டியாகப் பெயரெடுத்து விட்டனர்.

திரு—கொச்சி மக்கள் வாழ்க!

## டுனீசியா முழுவதும் கொந்தளிப்பு

## பிரதமர் வீட்டின் முன் மக்கள் ஆர்ப்பாட்டம்!

## போலீஸ் துப்பாக்கிப் பிரயோகம்!

### வாயில் கதை பேசும் பிரதமர் நேரு நடைமுறையில் காட்டுவாரா?

டியூனிஸ், ஏப். 14—

சலா எட்டின் பாக்கூச்சின் மந்திரிசபையை எதிர்த்து இங்கு மக்கள் மாபெரும் ஆர்ப்பாட்டம் நடத்தினர். போலீஸ் துப்பாக்கிப் பிரயோகம் செய்ததின் விளைவாக மூன்று டுனீசியர் படுகாயமுற்றனர்.

பாக்கூச்சின் மந்திரிசபையை ஆட்சேபித்து டுனீசிய மக்கள் அவருடைய வீட்டிற்கு முன்னால் ஆர்ப்பாட்டம் செய்தனர். அது சமயம் போலீசுக்கும் மக்களுக்கும் இடையில் நிகழ்ந்த கைகலப்பில் ஒரு கைக்குண்டும், கற்களும் வீசப்பட்டன.

ட்யூனிஸ் பெரும் மசூதிக்குமுன் இந்த ஆர்ப்பாட்டத்துக்கு முன்னர் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் "நியோடெஸ்டூர்" கட்சியின் தலைவர் பேசுகையில் ஏகாதிபத்திய கைக்கூலி மந்திரி சபையைக் கண்டித்துப் பேசினார். பாக்கூச்சின் மந்திரி சபை டுனீஷிய மக்களுக்கு பிரதிநிதித்வம் வாய்ந்ததல்ல என அவர் கூறினார்.

### நாடெங்கும் கொந்தளிப்பு

பாகூச் மந்திரி சபை அமைப்பைத் தொடர்ந்து நாடெங்கும் பெரும் கொந்தளிப்பேற்பட்டது. கடந்த வார இறுதியில் தென் ட்யூனிஸ்வில் ஒரு கைக்குண்டு ஒரு காரின் மீது வீசியெறியப் பட்டது. காரிலிருந்தவர்கள் பக்கத்திலிருந்த கிராமவாசியை சுட்டுத் தள்ளினர். ட்யூனிசுக்கு 6 மைல் தூரத்தில் 7 தந்தி கம்பங்கள் வெட்டி சாய்க்கப்பட்டன. அங்கு அருகில் ஒரு ரயில்வே பாலம் குண்டு வைத்து தகர்க்கப்பட்டது.

நகரெங்கும் கடைகள் மூடப்பட்டுள்ளன. மீண்டும் புதனன்றுதான் அவை திறக்கப்படுமென தேசியவாதிகள் அறிவித்தனர்.

### நேருவின் கண்டனம்

இந்திய பிரதமர் நேரு டெல்லியில் பேசுகையில் கூறினார். "இந்தியா எப்போதும் உலக முழுதும் ஏகாதிபத்யத்தை ஒழிக்கவே நின்றுள்ளது. எல்லா நாடுகளும் விடுதலை பெற்றால் ஒழிய யுத்தத்திற்கான காரணங்கள் ஒழியாது. சில ஆசிய தேசங்கள் சுதந்திரத்தையடைந்து விட்டன. ஆனால் இன்னும் ஆசியாவிலும் ஆப்ரிக்காவிலும் சுதந்திரமடையாத நாடுகள் பல உள்ளன. அவற்றில் ஒன்று பிரஞ்சாட்சியில் உள்ள டுனீஸியா."

ஏகாதிபத்யங்களை ஒழிக்க நிற்பதாகக் கூறும் நேரு, ஒவ்வொரு நாடும் உலகில் அமைதி நிலவ விடுதலை பெறவேண்டும் என்று வாயிலே

(3-ம் பக்கம் பார்க்க)

## ராயலசீமா பஞ்சப் பிரதேசத்தில் நிலத்தீர்வையை வஜாசெய்!

## கடன்வசதி கொடு!

### சர்வகட்சி பஞ்சநிவாரண மகாநாடு கோரிக்கை

விஜயவாடா, ஏப். 14—

இங்கு நடைபெற்ற சர்வகட்சி பஞ்ச நிவாரண மகாநாடு, ராயலசீமா பஞ்சப் பிரதேசத்தில் நிலவரி, தீர்வை இவைகளை வஜா செய்யவேண்டும் என்ற 12 அம்ச திட்டத்தையும், ஆந்திரநாடு முழுவதும் பஞ்ச நிவாரணக் கமிட்டிகள் அமைக்கவேண்டும் எனவும் தீர்மானங்கள் நிறைவேற்றியுள்ளது.

திரு. டி. பிரகாசம் அவர்களை தலைவராகக் கொண்ட 27 பேர் அடங்கிய மத்திய ஐக்கிய ராயலசீமா பஞ்ச நிவாரணக் கமிட்டி ஒன்றையும் மேற்படி மகாநாடு தேர்ந்தெடுத்தது.

பல்வேறு அரசியல் கட்சியினரும், பிரமுகர்களும் மேற்படி கமிட்டியில் அங்கம் வகிக்கின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது

பஞ்சத்தால் தவிக்கும் ராயலசீமா மக்களின் துயரைப் போக்க 12 அம்சங்களைக் கொண்ட திட்டத்தை உடனடியாக சென்னை சர்க்கார் அமுல் நடத்தவேண்டும் என சர்வகட்சி பஞ்ச நிவாரண மகாநாடு கோரியுள்ளது.

ஜமீன்தாரி பிரதேசங்களில் நிலத்தீர்வையை வஜா செய்யவேண்டும். இதர இடங்களில் நில வரியை வஜா செய்யவேண்டும். மைனர் நீர்பாசன திட்டங்களை அமுலாக்கி வேலையில்லாதோருக்கு வேலையளிக்கவேண்டும்; நிலவரி பாக்கி வசூலை நிறுத்த வேண்டும்; விவசாயிகளுக்கு கடன் வசதி செய்து கொடுக்கவேண்டும்; இன்னும் அதிக கஞ்சித் தொட்டிகளை திறக்கவேண்டும்; பஞ்சப் பிரதேசத்தில் மாணவர்களிடமிருந்து கட்டண வசூல் செய்யப்படக்கூடாது ஆகியவை மேற்படி திட்டத்தின் முக்கியாம்சங்கள்.

ஆந்திரநாடு முழுவதும் சர்வகட்சி பஞ்ச நிவாரண கமிட்டிகளை அமைத்து மக்களிடமிருந்து வசூலிக்கப்படும் உணவு தானியங்கள், பணம் இவைகளை மத்திய ஐக்கிய பஞ்ச நிவாரண கமிட்டிக்கு அனுப்பி வைக்கவேண்டும் எனவும் மகாநாடு ஆந்திர மக்களை அறைகூவியழைக்கிறது.

## ரஷ்யப் பெண்ணுக்கு முதற் பரிசு

புது டில்லி, ஏப். 13—

"சங்கர்ஸ் வீக்லி"யால் ஏற்பாடு செய்யப்பட்ட சிறுவர் சிறுமியர் கலைக் கண்காட்சியில் சிறந்த சித்திரத்திற்கான பரிசை மாஸ்கோவைச் சேர்ந்த 14 வயது பெண் அடைந்துள்ளார். இப்பரிசுக்கான ஜனாதிபதியின் தங்கப் பதக்கம் பிரதமர் நேருவால் சோவியத் ஸ்தானிகாலத்திற்கு அனுப்பி வைக்கப்பட்டது. பரிசு பெற்ற பெண்ணின் பெயர் மேரியானா வாஸ்கான்பின்வ்ஷ்.

இப்போட்டிக்கு 7,500 சித்திரங்கள் வந்திருந்தன.

## ரஷ்யாவுடன் வர்த்தகம் இல்லையேல் மரணமே

### பிரிட்டனுக்கு தொழிற்கட்சி தலைவர் டேவிஸ் எச்சரிக்கை

### முன்னேறும் ரஷ்ய மக்களுக்கு வாழ்த்து

லண்டன், ஏப். 14—

பிரிட்டிஷ் தொழிற்கட்சி பார்லிமெண்ட் அங்கத்தினரும் மாஸ்கோ பொருளாதார மகாநாட்டிற்கு சென்றுள்ளவருள் ஒருவருமான ஹெரால்ட் டேவிஸ் எம். பி. மாஸ்கோ ரேடியோவில் பேசுகையில் "எப்போதும் ரஷ்யா மேல்நாடுகளுக்கு "இல்லை"யெனும் பதிலை அளித்து வந்தது எனும் புளுகை உடைத்தெறிந்தார்.

மேற்கத்திய வல்லரசுகளின் மிரட்டல் யுத்த முட்டாள் தனத்தையும், அதே நேரத்தில் பின்தங்கிய நாடுகள் இயந்திரங்களுக்காக தவித்துக் கொண்டிருப்பதையும் நினைத்தால் நெஞ்சு வெடிப்பது போல் தோன்றுகிறது என்றாரவர்.

"உயர்ந்த வாழ்க்கை முறையை கொண்டுள்ள ரஷ்ய மக்களை, எனது கடந்த விஜயத்தின் போதிருந்ததை விட அதிக அளவு வளர்ந்துள்ள ரஷ்ய மக்களை, உணர்ச்சியுடனும், உற்சாகத்துடனும் ஜீவகளை மிக்க மாஸ்கோ தெருக்களில் நடமாடும் ரஷ்ய மக்களை, பள பளவென்றுள்ள மக்களுக்கு பயன்படும் கார்களை, இரவிலே, பெரும் பிரகாசமான விளக்கொளியிலேயும் பிரம்மாண்டமான கட்டிடங்களை நிர்மாணித்துக் கொண்டிருக்கும் ரஷ்ய கட்டிட நிர்மாணிகர்களை நான் வாழ்த்துகிறேன்" என்றார் டேவிஸ்.

முடிவாக அவர் கூறினார். "பிரிட்டன் என்றென்றைக்கும் ரஷ்யாவுடன் வர்த்தக உறவு வைத்துக் கொள்ளாமல் இருக்கமுடியாது. இன்றேல் பொருளாதார மரணம்தான்."



## எகிப்திய பொதுத் தேர்தல் ஒத்திவைப்பு

### வப்து கட்சி கண்டனம்

கெய்ரோ ஏப்ரல் 14—

மே 18-ந்தேதி நடைபெறவிருந்த எகிப்து பொதுத் தேர்தலை காலவரையறையின்றி ஒத்திவைத்து எகிப்து மன்னர் பிறப்பித்த உத்திரவை மாஜி பிரதமர் நஹாஸ் பாஷாவை தலைவராகக் கொண்டுள்ள வப்து கட்சி இன்று கண்டித்துள்ளது.

இதையறிவித்து பேசிய அக்கட்சியின் உதவி பொதுக்காரியதரிசி மஹம்மட் சொலிமான் கனம் பாஷா, இந்நடவடிக்கை அரசியல் சட்டத்திற்கு புறம்பானது. எகிப்திய மக்களின் அபிலாஷைகளுக்கு முட்டுக் கட்டையாக உள்ளது என்றார்.

"அபிப்பிராயம் வெளியிடும் சுதந்திரம் நமது பிறப்புரிமை. அரசியல் சட்டத்தின்மூலம் அது பரிபூர்ணமாக உத்தரவாதம் செய்யப்பட்டாலொழிய நாம் ஓய்ந்திருக்க மாட்டோம்."


# ஜனசக்தி

செவ்வாய் 15-4-'52


## இந்தியா-காஷ்மீர் உறவு

ரணவீர்சிங்புராவில் சில தினங்களுக்கு முன் காஷ்மீர் வகுப்புவாத ஸ்தாபனமான பிரஜா பரிஷத்தின் பிரசாரத்திற்கு பதில்கொடுக்கும் முறையில், இந்தியாவிலுள்ள வகுப்பு வாதிகளைப்பற்றி குறிப்பிட்டு, ஷேக் அப்துல்லா நிகழ்த்திய பிரசங்கம் பெரும் சர்ச்சைக்கு உள்ளாகியிருக்கிறது; அதன் தோரணையும் தொனியும் நேருவுக்கு பிடிக்கவில்லையாம்; சோஷலிஸ்டு அசோக்மேத்தாவும், ஜனசங் முகர்ஜியும் அதில் பெரிய அபாயத்தின் அறிகுறிகளைப் பார்க்கின்றனர். தினமணி தலையங்கம் அந்த பிரசங்கத்தை வீணான மனக்குழப்பம் என்று வர்ணிக்கிறது,

சமீப காலத்தில் பிற்போக்கு இந்தியப் பத்திரிகைகள் காஷ்மீர்பற்றி பல துஷ்பிரசாரங்கள் செய்து வருகின்றன. சில தினங்களுக்கு முன்னர் காஷ்மீர் அரசாங்கம் ஜனநாயக இயக்கத்தின் மீது அடக்கு முறை ஆரம்பித்துள்ளதாக செய்தி வெளிவந்து, பின்னர் காஷ்மீர் அரசாங்கத்தினால் மறுக்கப்பட்ட விஷயம் நினைவிருக்கும். அதேபோல ரணவீரசிங்புரா பிரசங்கமும் திரிக்கப்பட்டுள்ளதென்று ஷேக் அப்துல்லா மறுப்பு வெளியிட்டுள்ளார். இந்தியாவுடன் ஐக்யமாக காஷ்மீர் மக்கள் செய்த முடிவு மாற்ற முடியாதது என்று அதில் வலியுறுத்தியுள்ளார்.

இன்று காஷ்மீர் இந்தியாவுடன் பாதுகாப்பு, போக்குவரத்து, அயல்நாட்டு விவகாரம் ஆகிய மூன்று முக்ய விஷயங்கள் சம்பந்தமாக மட்டிலுமே இணைக்கப்பட்டிருக்கிறது. காஷ்மீரிலுள்ள பிரஜா பரிஷத் என்னும் வகுப்புவாத ஸ்தாபனம் இந்தியாவுடன் நிபந்தனையின்றி இணைய வேண்டுமென்று கிளர்ச்சி செய்து வருகிறது.

இந்தியாவுக்கும் காஷ்மீருக்குமிடையில் நல்லுறவு நிலவ வேண்டுமென்பது நியாயமானது; இரு நாட்டு மக்களுக்கும் இடையே இன்றுள்ள உறவு இன்னும் பலப்பட வேண்டும் என்பதிலும் இரண்டு அபிப்பிராயங்கள் இருக்கமுடியாது. ஆனால் இன்று வகுப்புவாத பிற்போக்காளர்கள் காஷ்மீரிலும் இந்தியாவிலும், இரு நாடுகளுக்குமுள்ள உறவு நிலைமையைக் குறித்து சர்ச்சையைக் கிளப்பியுள்ள காரணம் என்ன? இதை பாகிஸ்தான் பிற்போக்காளர்கள் பயன்படுத்திவரும் நோக்கம் என்ன? மற்ற சமஸ்தானங்களைப் போலன்றி, காஷ்மீர் மூன்று விஷயங்களைப் பொறுத்து மட்டுமே இந்தியாவுடன் இணைக்கப்பட்டிருக்கிறது என்பதல்ல அவர்கள் கண்ணை உறுத்தும் விஷயம். நஷ்டஈடின்றி நிலச்சுவான்தாரி முறையை ஒழித்தது இந்த பிற்போக்காளரின் ஆத்திரத்தைக் கிளப்பிவிட்டுள்ளது!

இந்த வகுப்புவாதிகள் கோரும் இந்தியா-காஷ்மீர் உறவு, காஷ்மீர் ஜனநாயக இயக்கத்தை பலஹீனப்படுத்தும் உறவு; காஷ்மீர் மக்களை பின்னுக்குத் தள்ளும் உறவு; ஏற்கனவே ஜனநாயக இயக்கம் சாதித்துள்ள முன்னேற்றத்தைத்தடைசெய்து, பின்னுக்கு இழுக்கும் சக்தியாக செயலாற்றும் உறவாகும்.

காஷ்மீர்—இந்திய யூனியன் இணைப்பு ஒரு குறிப்பிட்ட வகையில் இருப்பதால், நஷ்டஈடின்றி நிலப்பிரபுத்துவத்தை ஒழிக்க முடிந்தது. இந்திய அரசியல் சட்டம் இதைத் தடுக்கிறது என்பது எல்லோரும் அறிந்த விஷயம். ஹைதராபாத் சட்டசபையில் காங்கிரஸ் பிரதமர் அந்தசட்டத்தைச் சுட்டிக் காட்டியிருப்பது மக்கள் அறிந்ததே. காஷ்மீர்—இந்திய யூனியன் இணைப்பு என்று கோஷிக்கும் காலத்தில் இந்திய அரசியல் சட்டத்தின் பிற்போக்குத் தன்மையையும், அதனடிப்படையில் ஏகாதிபத்திய—நிலப்பிரபுத்துவ சக்திகள் சாதிக்க முயற்சிக்கும் ஒற்றுமையின் தன்மையையும் மக்கள் ஆராய்ந்தறியாமல் இருக்க முடியாது.

இந்தியா-காஷ்மீர் உறவு காஷ்மீர் ஜனநாயக சக்திகளையும், இயக்கத்தையும் மேலும் பலப்படுத்தக் கூடியதாக இருக்கவேண்டும்; ஆங்கிலோ அமெரிக்க ஏகாதிபத்யத் தலையீட்டை முறியடிக்க வல்லதாக இருத்தல்வேண்டும்; ஆங்கிலோ அமெரிக்கஏகாதிபத்யஏஜெண்டுகளாகசெயலாற்றும் பாகிஸ்தான், இந்தியா, காஷ்மீர் வகுப்புவாதிகளின் சீர்குலைவு வேலைகளை எதிர்த்து நின்று மக்கள் ஒற்றுமையை பாதுகாப்பதற்கு பலம் தரக்கூடியதாக இருக்கவேண்டும். அதுதான் இந்தியா—காஷ்மீர் உறவுக்கு சரியான அஸ்திவாரம்.

காஷ்மீர் ஜனநாயக இயக்கத்தை பலஹீனப்படுத்துவது காஷ்மீர் மக்களுக்கு நாம் இழைக்கும் தீங்குமட்டுமல்ல, நமக்கு நாமே தீங்கிழைத்துக் கொள்ளுவதும் ஆகும். பாகிஸ்தான் மக்களுக்குத் தீங்கிழைப்பதாகும்; சோவியத் யூனியனுக்கும் சீனாவுக்கும் தீங்கிழைப்பதாகும்; ஏன் உலக சமாதானத்திற்கும், மக்கள் சுதந்திரத்திற்கும் தீங்கிழைப்பதாகும். ஏனெனில் ஆங்கிலோ-அமெரிக்க ஏகாதிபத்தியங்கள் காஷ்மீரை தளமாகக்கொண்டு இந்தியா, பாகிஸ்தான் ஜனநாயக இயக்கத்திற்கு விரோதமாக செயலாற்றவும், சோவியத் யூனியன், சீனா ஆகிய அண்டை நாடுகளின் பாதுகாப்பிற்கு விரோதமாக செயலாற்றவும், மூன்றுவது உலக யுத்தத்தை மூட்டுவதற்கும் முயன்று வருகின்றது. இந்த ஏகாதிபத்திய சதியைப் பற்றி காஷ்மீர் அரசியல் நிர்ணயசபையின் தலைவர் ஜனுப் குலாம் சதீக் பகிரங்கமாக எச்சரித்துள்ளார்..

ஆதலின் இந்திய ஜனநாயக வாதிகள் உஷார் உணர்வுடன் காஷ்மீர் பிரச்னையில் ஈடுபட வேண்டும்; இந்தியா—காஷ்மீர் ஒற்றுமை என்ற கோஷத்திற்குப் பின்னால் வகுப்புவாதிகளும், ஏகாதிபத்திய ஏஜெண்டுகளும் மறைந்துகொண்டிருப்பதை கவனத்தில் கொள்ள வேண்டும்; காஷ்மீர் மக்களை பின்னுக்கு இழுக்கும் முறையில் இந்தியா-காஷ்மீர் உறவு வளர்ப்பதற்கு வகுப்புவாதிகள் செய்துவரும் முயற்சிகளை முறியடிக்கவேண்டும். காஷ்மீர் நிலச்சீர்திருத்தத்தை உறுதிப்படுத்தும் உறவு வேண்டும், இந்தியா-காஷ்மீர் உறவு என்பதின்பேரில் காஷ்மீர் மக்கள் தங்கள் தலைவிதியை தாங்களே நிர்ணயிக்கும் உரிமைக்கு பங்கம் விளைவிக்கக் கூடாதென்று இந்திய ஜனநாயக இயக்கம் கோஷிக்கவேண்டும், இந்தியா, பாகிஸ்தான், காஷ்மீரிலுள்ள வகுப்புவாதிகளை தனிமைப் படுத்தவேண்டும். ஜனநாயக சக்திகள் ஐக்யப்படவேண்டும். பரஸ்பரம் ஜனநாயக இயக்கம் பலப்படுத்தப்படவேண்டும்.

## ஈட்டிமுனை

### அண்டப் புளுகு

அழகிய நடிகைகளின் ஆதரவாளர் ராமனுதபுரம் ராஜா; நாட்டியக் கலையை வைரங்களைக் கொட்டி வளர்ப்பவர் ராமனுதபுரம் ராஜா; பரம்பரை ராஜபோகங்களை பேணி பாதுகாப்பவர் ராமனுதபுரம் ராஜா! தென்னாட்டிலுள்ள இந்தக் குட்டி ஜமீன்தார் குடியானவன் ஆய் விட்டால், வடநாட்டிலுள்ள பெரிய ராஜாக்கள், சும்மா இருப்பார்களா? காங்கிரஸ் ஆச்சாரியார், ராமனுதபுரம் ராஜாவையும், பழனிச்சாமிக் கவுண்டரையும், பட்டாபிராமையாவையும் பாட்டாளிகள் ஆக்கினால், ஜன சங்க தலைவர் ஷியாம பிரசாத் முகர்ஜி சும்மா இருப்பாரா?

தேர்தல் முடிவுகள் இவர்களை புதிய அகராதிகள் தயாரிக்கத் தூண்டியுள்ளது; அதில் கருப்பு வெள்ளை ஆகிறது; வெள்ளை கருப்பாகிறது.

#### பழய சரக்கு—புதிய லேபிள்

ஷியாம் பிரசத் முகர்ஜி தேர்தலில் வெற்றி பெறுவதற்கு வகுப்பு வாதத்திற்கும் புதிய பட்டுப் போர்வை போர்த்துப் பார்த்தார்! ஹிந்து மகாசபைக்கு பொதுஜன ஆதரவு கிடையாது. பெயரும் அப்பட்டமாக இருக்கின்றது. சோலவை எடுத்து லேபிளை கிழித்தெறிந்தார். ஜனங்களின் சங்கம் என்று புது லேபில் போட்டார். அந்த சரக்கை எடுத்துக்கொண்டு தேர்தலில் நுழைந்தார். பொல்லாத பொது ஜனங்கள் லேபிளைப் பார்த்து ஏமாறவில்லை; தேசம் பூராவும் வகுப்பு வாதத்திற்கு படுதோல்வி கொடுத்தார்கள். ஷியாமபிரசாத் முகர்ஜிக்கு கோபம் வந்துவிட்டது!

தேர்தல் முடிவுகள் ஜனநாயகத்திற்கு ஆதரவான போக்குகளை வெளிப்படுத்தவில்லை என்று கடிந்து கொள்கிறார்; புது அகராதியில் வகுப்புவாதம்தான் ஜனநாயகம்!

ஷியாமபிரசாத் சாதாரண மாணவரா? விடாகண்டர்! ஜனங்கள் என்று பெயரிட்டால் போதவில்லை; மக்கள் ஏமாறவில்லை. இனியும் ஒருகை பார்ப்போமென்று கச்சை கட்டி இறங்குகிறார் ஷியாமபிரசாத்.

#### அக்கீஸன் ஆணை— முகர்ஜியின் முழக்கம்

தேர்தல் முடிவு பிற்போக்காளர்களுக்கு அபாய சங்கு ஊதியிருக்கிறது என்று அக்கீஸன் ஆணையாக முகர்ஜி முழக்குகிறார். பிற்போக்கு சக்திகள் உடனே ஒன்றுபட்டு செயலாற்ற வேண்டும் என்ற அக்கீஸன் ஆணைப்படி செயலாற்றத் தொடங்கிவிட்டார் முகர்ஜி; தென்னாட்டில் தலைதூக்கியுள்ள அபாயத்தைத் தவிர்க்க அகில இந்திய ஒற்றுமையை வலியுறுத்துகிறார் முகர்ஜி. அகில இந்திய ஐக்கிய ஸ்தாபனத்திற்கு பெயர் சூட்டுவதுதான் இப்பொழுது முகர்ஜிக்குள்ள பிரச்னை.

அதற்கும் முகர்ஜியிடமிருந்து அரிய யோசனை வந்திருக்கிறது! காங்கிரஸுக்கும் கம்யூனிஸ்டுகளுக்கும் இடையில், இந்தியாவிலுள்ள சிறிய கட்சிகளை எல்லாம் ஒன்று கூட்டி, தீவிர திட்டங்களை பிரகடனப்படுத்தி, ஒரு இடதுசாரி அரசியல் கட்சியை உருவாக்க வேண்டுமென்று ராஜாக்களின் அகில இந்திய ஜனதந்திர (ஜனநாயக) பரிஷத்தின் ஆண்டு விழாவில் முகர்ஜி பிரகடனபபடுத்தியுள்ளார்.

இந்த இடதுசாரி ஸ்தாபனத்தில் வலதுசாரி சோஷலிஸ்டுகளுக்கும் இடம் செய்திருப்பார் என்று எண்ணுகிறோம்!

மன்னர்கள் இடதுசாரிவாதிகள் ஆகிறார்கள்; வடிகட்டிய வகுப்பு வாதம் இடதுசாரிவாதமாகிறது. தோல்வி வெற்றியாகும்பொழுது வகுப்புவாதம் ஏன் இடதுசாரி ஆகக் கூடாது என்று முகர்ஜி கேட்டால் எப்படி அவருக்கு பதில் சொல்ல முடியும்?

#### தோல்விதான் தொடரும்

இந்த இடதுசாரி கட்சிக்கு நேரு அதி தீவிரவாதி, முற்போக்காளராகப் படுகிறார். எவ்வளவு தீவிர வாதம் பாருங்கள்.

இனி முளைக்கும் காளான்களெல்லாம் இடதுசாரி வாதம்தான் பேசும்; ஆனால் முளைப்பது என்னமோ குப்பை மேட்டில்தான்; ஜீவிதமும் சுருக்கம்தான்!

ஏனெனில் தேர்தல் இடசாரிகளின் வெற்றியைக் குறித்தது; இனி இடதுசாரி லேபிளுடன்தான் சரக்கு விற்கமுடியும்!

லேபிளை தள்ளி வைத்துவிட்டு, சரக்கை பரிசீலனை செய்யும் பழக்கம் ஜனங்களுக்கு வந்துவிட்டது.

ஹிட்லர், தேசிய சோஷலிஸம் என்று லேபிளிட்டு, பாஸிஸத்தை விற்க முயன்று தோற்றான்.

இந்திய வலதுசாரி சோஷலிஷ்டு தலைமை அமெரிக்க ஏகாதிபத்ய வாதத்தையும் அட்லி ஆதிக்கவாதத்தையும் சோஷலிஸம் என்று லேபிளிட்டு விற்க முயன்று தேர்தலில் தோற்றது

ஷியாமபிரசாதின் இடதுசாரி லேபிளுக்கும் கதி அதுவாகத்தானிருக்கும் என்பதில் ஐயமில்லை.

## மே தினத்தை பத்திரிகையாளர் தினமாக கொண்டாட முடிவு

### கல்கத்தா மகாநாட்டின் தீர்மானங்கள்!

கல்கத்தா, ஏப். 13—

இந்தியப் பத்திரிகையாளர் சம்மேளனத்தின் அகில இந்திய மகாநாடு இன்றுடன் இங்கு முடிவுற்றது. மகாநாடு நிறைவேற்றிய பல தீர்மானங்களின் முக்கிய அம்சங்கள் பின்வருமாறு:—

● இந்திய சர்க்கார் சம்மேளனத்துடன் கலந்தாலோசித்து ஒரு பத்திரிகைக் கமிஷன் நியமிக்கவேண்டும். இந்தக் கமிஷன் பின் வரும் விஷயங்களைப் பற்றி விசாரணை செய்து முடிவுகள் தெரிவிக்க வேண்டும்.

1. சம்பளம், வேலை நேரம், பிராவிடெண்ட் நிதி, விடுமுறை, லீவ், இதர லேபர் சட்டங்களை பத்திரிகை தொழில் துறையில் அமுலுக்குக் கொண்டுவருவது முதலியன;

2. பத்திரிகையாளர்களுக்கும் பிரஸ் தொழிலாளிகளுக்கும் பயிற்சி

3 சுதேசி, விதேசி, செய்தி ஸ்தாபனங்கள் இந்நாட்டில் இயங்கி வரும் முறை;

4. ஏகபோக உரிமையாக ஒரு சிலர் கையில் பல பத்திரிகைகள் சிக்கிக் கிடப்பது;

5. பத்திரிகைக் காகிதம் உற்பத்தித் தொழிலை ஆரம்பித்து வளர்ப்பது;

6. பத்திரிகைச் சுதந்திரம்; அதற்கு முரணான சட்டங்களை ரத்து செய்வது அல்லது திருத்துவது;

7. அவதூறு, கோர்ட் அவமதிப்பு சம்பந்தமாக உள்ள சட்டங்களைப் பரிசீலிப்பது முதலியன.

இந்தக் கமிஷன் அமைப்பதற்கு முன் இடைக்காலத்தில் ஒரு விசாரணைக் கமிட்டி அமைத்து பத்திரிகையாளர்களின் வேலை நிலைமைகளை அபிவிருத்தி செய்யவேண்டும்.

● சமீபத்தில் ராஜாஜி முன் முயற்சியுடன் நேரு சர்க்கார் பத்திரிகைச் சுதந்திரத்தை நசுக்கும் வகையில் நிறைவேற்றியுள்ள சட்டத்தை முழு மூச்சுடன் எதிர்ப்பதாகவும், புதிய டில்லி சட்டசபை அதை ரத்துசெய்ய வேண்டுமென்றும் தீர்மானிக்கப்பட்டது.

● சம்மேளனத்தின் அபிவிருத்திக்காக ரூ. 5 லட்ச நிதி வசூல் செய்வது; ஒரு பத்திரிகையை நடத்துவது.

● "சுதந்திரா" ஆசிரியர் திரு காசா சுப்பாராவ் விஷயமாக சென்னை சட்டசபை சபாநாயகர் எடுத்த நடவடிக்கையும் 'பிளிட்ஸ்' பத்திரிகை உதவி ஆசிரியர் மிஸ்திரி மீது உத்தர பிரதேஷ் சபாநாயகர் எடுத்த நடவடிக்கையையும் குறிப்பிட்டு இராச்சியங்களில் சட்டசபைகள் அரசியல் சட்டத்தில் அளிக்காத அதிகாரங்களைக் கையாண்டு பத்திரிகை உலகின்மீது கைவைக்கும் போக்கைப்பற்றி கவலை தெரிவித்தது.

● பாதுகாப்புச் சிறையிலுள்ள பத்திரிகையாளர்களை விடுதலை செய்யவேண்டும் அல்லது விசாரணை செய்ய வேண்டும்.

● "உழைக்கும் பத்திரிகையாளர்கள் தினமாக" மே தினத்தை (மே 1-ம் தேதி)க் கொண்டாடுவது.

● சம்மேளனத்தை தொழிற் சங்க சட்டத்தின்கீழ் ரிஜிஸ்டர் செய்யா விட்டாலும், அதன் கிளை ஸ்தாபனங்களை ரிஜிஸ்டர் செய்வது.

சம்மேளனத்தின் தீர்மானங்கள் பல அம்சங்களின் முற்போக்கானவையாகவும், பத்திரிகையாளர் நலன்களுக்குப் போராடுபவையாகவும் உள்ளன. சம்மேளனத்தின் ஒற்றுமையையும், பலத்தையும் பெருக்கி, மே தினத்தன்று "பத்திரிகையாளர் தினத்தை" விமரிசையாக நடத்துவது ஒவ்வொரு பத்திரிகையாளனின் தலைசிறந்த கடமையாகும்.

## தஞ்சை ஜில்லாவில் த. நா. விவசாய சங்க காரியதரிசி தோழர் சீனிவாசராவ் சுற்றுப் பிரயாணம்

18-4-52 குப்புசாமி தினம் களப்பாள் (மன்னார்குடி தாலூக்கா)
19-4-52 திருத்துறைப்பூண்டி
20-4-52 மன்னார்குடி — தஞ்சை ஜில்லா விவசாய ஊழியர்கள் கூட்டம்.
21-4-52 பட்டுக்கோட்டை தாலூகா.
22-4-52 அறந்தாங்கி தாலூக்கா.
23-4-52 நாகை தாலூக்கா (கீவளூர்)
24-4-52 நன்னிலம் தாலூக்கா
25-4-22 மாயவரம் தாலூக்கா
26-4-52 சீர்காழி தாலூக்கா

தமிழ்நாடு விவசாய சங்க உப காரியதரிசி

### தோழர் மணலி கந்தசாமி எம். எல். ஏ. சுற்றுப் பிரயாணம்

19-4-52 கும்பகோணம் டிவிஷன் விவசாய சங்க ஊழியர்கள் கூட்டம்.
20-4-52 மன்னார்குடி — தஞ்சை ஜில்லா ஊழியர்கள் கூட்டம்.
21-4-52 சென்னை.

# டெல்லி சர்க்காரின் உளவு வேலை

## 'நவலோகம்' பத்திரிகையின் உரிமைகள் பறிக்கப்படுகின்றன

### பத்திரிகையின் தபால்களை போலீஸ் உடைத்துப் பார்க்கிறது

எர்ணாகுளம், ஏப். 7—

எர்ணாகுளத்திலிருந்து வெளி வரும் முற்போக்கு மலையாள தின சரியான "நவலோக"த்திற்கு வரும் தபால்கள் யாவற்றையும் டெல்லி சர்க்கார் போலீஸ் உளவு இலாகா உத்தியோகஸ்தர் ஒருவர் திறந்து பார்த்துவிட்டு அனுப்புகிறார். எந்த பத்திரிகைக்குமுள்ள சர்வசாதாரண மான உரிமைகள்கூட "நவலோகம்" பத்திரிகைக்கு இல்லாதபடி செய் துள்ளது காங்கிரஸ் சர்க்கார்.

இந்த போலீஸ் உத்தியோகஸ்தர் எர்ணாகுளம் போஸ்ட் மாஸ்டரை நிர்ப்பந்தம் செய்து 'நவலோக'த் திற்கு இழைக்கும் இந்த கொடு மையை எதிர்த்துக் கண்டிக்கும்படி "நவலோகம்" ஆசிரியர், பார்லி மெண்ட் உறுப்பினர்களையும் எல்லா ஜனநாயக பத்திரிகைகளையும் ஜன நாயக வாதிகளையும் வேண்டிக் கொள்கிறார்.

### பாலன் மரணதண்டனையை எதிர்த்து சென்னையில் கூட்டம்

சென்னை ஏப். 14—

மக்கள் முற்போக்கு கழக திறப்பு விழா 10-4-52ல் தண்டையார்பேட் டை ஒய். எம். சி. ஏ. மைதானத்தில் தோழர் வி.பி. முருகையன் தலைமை யில் நடைபெற்றது. மதுரை கம்யூ னிஸ்ட் தலைவரான தோழர் கே. பி. ஜானகியம்மாள் கழகத்தை ஆரம் பித்து வைத்தார்.

தோழர்கள் ஜீவா, கே.டி. ராஜு, கருப்பண்ணன் முதலியோர் ஆச்சாரி யார் மந்திரிசபையைக் கண்டித்தும், பாலன் மீது விதித்துள்ள மரண தண்டனையை ரத்துசெய்ய வேண்டு மென்றும் பேசினர்.

## கூலி உயர்வு கோரி

### 720 சுமைதூக்கும் தொழிலாளர் வேலைநிறுத்தம்!

மங்களூர், ஏப். 12—

இங்கு 5-4-52 முதல் 720 சுமை தூக்கும் பஜார் தொழிலாளர் வேலை நிறுத்தம் செய்து வருகின்றனர்.

1947ல் பஜார் வியாபாரிகள் சங் கத்திற்கும் தொழிலாளர்கள் சங்கத் திற்கும் ஏற்பட்ட ஒப்பந்தப்படி, விலைவாசிப் புள்ளிக்கு ஏற்ப கூலி யை உயர்த்த மறுத்ததே வேலை நிறுத்தத்தின் காரணம்.

வியாபாரிகள் சுமார் நாற்பது பேருடைய கடைகளில் வேலை நிறுத்தம் ஏற்படவில்லை. ஏனெனில் அவர்கள் தொழிலாளிகள் கோரிய படியே 25 சதவிகித கூலி உயர்வு கொடுத்துள்ளனர்.

வேலைநிறுத்தத்தை முறியடிக்க பல தந்திரங்கள் கையாண்டும் பலிக்க வில்லை. பொதுமக்களின் ஆதரவு, வேலைநிறுத்தத்திற்குத் திரண்டுவரு கிறது. இந்த குறுகிய காலத்திற்குள் பொதுமக்கள் சுமார் 600 ரூபாய் வரை ஸ்டிரைக் நிதிக்கு உதவியுள்ள னர் என்பது குறிப்பிடத்தக்கது.

இவ் வேலைநிறுத்தத்திற்கு, தென் கன்னட தொழிற்சங்கக் காங்கிரஸ் ஆதரவு தெரிவித்து அறிக்கைவிடுத் துள்ளது.

## டுனீசியா முழுவதும் ...

(முதற் பக்கத்தொடர்ச்சி)

கதை பேசுகிறார். ஆனால், மலாயா வில் பிரிட்டிஷ் ஏகாதிபத்யத்திற்கு பணி புரிந்தார். பல வருடங்களாக விடுதலைக்கு உயிரைக் கொடுக்கும் வியட்நாம் மக்களைப்பற்றி ஒரு வார்த்தையில்லை. ஆனால் காமன் வெல்த்திலே அங்கம் வகிக்கிறார். வெள்ளை மூலதனத்துக்கு இந்தியா வில் பாதுகாப்பளிக்கிறார்.

இதே நேருதான் அந்த ஏகாதிபத் யங்களின் பெயரைச் சொல்லக்கூட அஞ்சுகிறார். அக்கிரமம் என்று தெரிந்தும் கண்டிக்கத் தயங்குகிறார்.

### "நடைமுறையில் காட்டு"

அவர் கூறினார்: "வல்லரசுகள் டுனீசிய பிரச்னையை ஐ. நா. சபை விவாதிப்பதையே எதிர்க்கின்றன." என். பிரிட்டன் எதிர்த்தது என்று கூறவில்லை. இது மிகவும் வருந்தத் தக்கதாக உள்ளதாகவும் கண்ணீர் வடிக்கிறார். வடித்தென்ன பயன்?

உண்மையில் சமாதான அபி லாஷை பூர்த்தி பெறவேண்டு மானால், ஏகாதிபத்திய சதிகளுக் கிடையில் நடு நிலை எனில் பய னில்லை அதற்கு மாறாக ஆசியா வின் விடுதலைக்காக எதிர்த்து ஐ. நா. வில் போராடவேண்டும். பிரிட் டிஷ் காமன்வெல்த்திலிருந்து வெளி யேற வேண்டும். சோவியத் ஜன நாயக முகாமுடன் நின்று உறுதி யாக போராடவேண்டும்.

## எம். வி. சுந்தரத்தை விடுதலை செய்!

### தெ.இ.ர.தொ. சங்க தனுஷ்கோடி கிளையின் தீர்மானம்

தனுஷ்கோடி, ஏப். 10—

9-4-52 மாலை 7 மணிக்கு ஜவஹர் சதுக்கத்தில் தெ இ. ர. தொ. ச. தனுஷ்கோடி கிளையின் சார்பில் தோழர் எ. கோபால் நாயுடு தலை மையில் நடைபெற்ற 350 பேர்கள் கொண்ட பொதுக்கூட்டத்தில் தோழர்கள் வி. சவுரிமுத்துவும், சி. வேலாயுதன் நாயரும் பேச்சாளர்க ளாக பங்கெடுத்தனர்.

இராமநாதபுரம் ஜில்லா விவசாய தொழிலாளர்களின் தலைவரான தோழர் எம்.வி, சுந்தரத்தை விடு தலை செய்யவேண்டுமென்றும் இன் னும் பல தீர்மானங்களும் நிறைவேற் றப் பட்டன.

# இங்கும்—அங்கும்

புறப்பட்டவள், திரும்ப வந்துவிட் டாள்.

"என் அம்மா திரும்பி விட்டாய்" என்று கேட்டேன்.

"எதிரிலே ஒற்றைப் பார்ப்பான் வந்து விட்டான்" என்றாள்.

"மூட நம்பிக்கை விட்டபாடில்லை" என்றேன்.

"மந்திரிகள் மழைக்கு பூஜை செய்யும்பொழுது நாங்கள் எவ் வளவோ பரவாயில்லை" என்றாள்.

"மந்திரிகள் அவ்வளவு ஏமாளிகள் அல்ல: அவர்கள் பூஜை செய்ய வில்லை! உங்களை பிரார்த்தனை செய்யச் சொல்லுகிறார்கள். ஒத்தப் பார்ப்பானைக் கண்டால், புறப்பட் டவர்கள் போகாமல் வீடு திரும்பும் உன்போன்றவர்கள் மலிந்திருக் கிறார்கள் என்பது மந்திரிகளுக்குத் தெரியும்.

"எங்கள் மாதிரி ஆட்கள் எங்கே யும்தான் இருக்கிறார்கள்; ரஷ்யாவி லும் இருப்பார்கள்; சீனாவிலும் இருப்பார்கள்! உங்களைமாதிரி இருப்பவர்கள்தான் அரிது" என்று தன்னைத்தான் திருப்திப்படுத்திக் கொண்டு என்னையும் தாக்கினாள் செல்வி.

"சீனாவில் மூடநம்பிக்கைகள் மறைந்து வருகின்றன; ஆனால் இங்கு மூடநம்பிக்கையை ஆட்சி யாளர் வேண்டுமென்றே வளர்த்து வருகிறார்கள்" என்றேன்.

"எப்படி" என்றாள்.

"சீனமக்கள் குடியரசின் அடிப் படைச் சட்டமே மூடநம்பிக்கையை அகற்றுவதற்கு உத்திரவாதம் செய் கிறது. கலையும் கல்வியும், தேச பக்தி, விஞ்ஞான அடிப்படையில் அமையவேண்டுமென்று அச்சட்டம் கூறுகிறது; பொதுஜனங்கள் எளி தில் புரியக்கூடிய முறையில் இருக்க வேண்டுமென்று அச் சட்டம் வரையறுத்துக் கூறுகிறது.

"அதற்கும் ஒரு சட்டமிருக் கிறதா?"

"சட்டமிருப்பது மட்டுமல்ல; அதன்படி காரியங்கள் நடக்கின்றன. ஒரு உதாரணம் சொல்லுகிறேன் கேள்!; அகில சீன விஞ்ஞான தொழில் அறிவு வளர்ப்பு ஸ்தா பனம் என்று ஒன்று இருக்கிறது. ஷாங்காய் நகரத்திலுள்ள அதன் கிளைச்சங்கம் மட்டும் தேசிய தினத் தன்று 125 விஞ்ஞான பிரசங்கங் களுக்கு ஏற்பாடு செய்தது; அதில் 217 விஞ்ஞானிகள் பங்கு எடுத்துக் கொண்டார்கள்; பீகிங்கில் மட்டும் 219 விஞ்ஞான பிரசங்கங்கள் நிகழ்த் தப்பட்டன அதற்கு 1,30,000 பேருக்குமேல் வந்தனர்." என் றேன்.

"புஸ்தகம் படிக்கின்ற மாதிரித் தானே புள்ளி விபரமாக பேசுகிறீர் கள்" என்று அதிசயித்தாள் செல்வி.

"சீனாவில் விவசாயிகள் மத்தியில் புஸ்தகம் படிப்பது என்பது பெரிய இயக்கமாக வளர்ந்திருக்கிறது. புஸ் தகங்கள் கோழிமுட்டைபோல் மலி வாக விற்கின்றன. அதனால் அந்த புஸ்தகங்களை முட்டைப்புத்தகங்கள் என்று அழைக்கத் தொடங்கி விட்ட னர்" என்றேன்.

"நீங்கள் பேச ஆரம்பித்தால் பேசிக்கொண்டே யிருப்பீர்கள். சீனாவைப்பற்றிக் கேட்டால், கேட்டுக் கொண்டே இருக்கச் சொல்லும். நான் புறப்படுகிறேன். பார்ப்பான் வந்தால் வந்து தொலையட்டும்" என்று சொல்லிக்கொண்டே செல்வி கிளம்பிவிட்டாள்.

"இன்னும் மக்கள் சினிமா, புதுமை இலக்கியம் எல்லாம் சீன மக்களின் கண்ணோட்டத்தை அடி யோடு மாற்றி வருகிறது" என் றேன்.

இவர் ஒரு விடாக்கண்டன் என்று சொல்லுவதுபோல் என்னை ஒரு பார்வை பார்த்துவிட்டு மறைந்தாள் செல்வி.

—செல்வன்

# மாதர்களுக்கு சமவுரிமை வழங்கு!

## ஐ. நா. வுக்கு உலக ஜனநாயக மாதர் சம்மேளனத்தின் அறைகூவல்!

பெர்லின், மார்ச். 31—

பல நாடுகளில் ஐக்கிய நாடுகளின் சாஸனத்திற்கு விரோத மாய் பெண்களின் சமவுரிமை மறுக்கப்பட்டுள்ளதையும், அரசி யல், பொருளாதார, பிரஜா உரிமைகளில் பாரபட்சம் காட்டப் படுவதையும், சமவேலைக்கு சம சம்பளம் மறுக்கப்படுவதையும், கண்டித்து உலக ஜனநாயக மாதர் சம்மேளனம் ஐ. நா. வின் பொதுக் காரியதரிசிக்கு ஒரு அறிக்கை அனுப்பியுள்ளது.

13½ கோடி உறுப்பினர்களைக் கொண்ட இம்மாதர் சம்மேளனம் சமர்ப்பித்துள்ள அறிக்கையில் காணப்படும் முக்கிய விஷயங்கள் பின்வருமாறு:—

"ஐ. நா.வில் அங்கம் வகிக்கும் நாடுகளில் 15 நாடுகளில் பெண்க ளுக்கு அரசியல் அல்லது சாதார ணப் பொருளாதார, பிரஜா உரிமை கள்கூட வழங்கப்படாதுள்ளது எண் ணற்ற காலனி நாடுகள், டிரஸ்டி பிர தேசங்கள் முதலியவற்றில் பெண்க ளுக்கு எந்தவிதமான உரிமைகளும் வழங்கப்படவில்லை" என்று அவ் வறிக்கை கூறுகிறது.

இதற்கு நேர்மாறாக சோவியத் யூனியன், போலந்து, செக்கோஸ்ல வாகியா, சீனா, இதர மக்கள் ஜனநா யக நாடுகளில் மாதர்கள் ஆண்களு டன் சரிநிகர் சமானமாக வாழ்வதை யும் சோவியத் யூனியனில் மட்டும் 2,209 பெண்கள் பார்லிமெண்டுக ளின் உறுப்பினர்களாக இருந்துவரு வதையும் இவ்வறிக்கை சுட்டிக் காட் டுகிறது.

இராணுவ பட்ஜெட்டின் காரண மாய், பொதுமக்களின் அத்தியாவசி யத் தேவைகள் வெட்டப்படுவதை அவ்வறிக்கை எடுத்துக் காட்டிவிட்டு, சமாதானத்திற்காவும், ஆயுத பரி ஹாரணத்திற்காகவும் உலக மாதர்கள் நிற்கின்றனர் என்று கூறுகிறது.

"பெண்களுக்கெதிராய் காட்டப் படும் அவமானகரமான பாரபட் சங்களை உடனே ஒழிக்க 'ஐ. நா. சகல சாத்தியமான நடவடிக்கைகளை யும் எடுக்கவேண்டும் என்றும் தமது சம்மேளனத்தை 'ஏ' பிரிவு ஸ்தா பனமாக ஐ. நா. அங்கீகரிக்கவேண் டும் என்றும் கோருகிறது.

# தமிழ் நாட்டுச் செய்திகள்

### வள்ளியூரில் காங்கிரஸ் மந்திரிசபை எதிர்ப்பு ஊர்வலம்

வள்ளியூர், ஏப். 10—

6-4-52-ல் காங்கிரஸ் மந்திரிசபை யை எதிர்க்கவும் ராஜாஜியை மேல் சபைக்கு நியமனம் செய்யப்பட்ட தைக் கண்டித்தும் நான்குநேரி விவ சாய சங்கச் செயலாளர் தலைமையில் ஊர்வலம் நடைபெற் றது. பொதுக்கூட்டம் தோழர் வி. எம்.எஸ். நாராயணன், தலைமையில் நடந்தது. டி. எஸ். நாராயணன் எம். சொக்கலிங்கம் முதலியோர் பேசினர்.

கொரியாவில்,விஷக்கிருமி குண்டு களை அமெரிக்கா வீசுவதை எதிர்த் தும் தீர்மானம் நிறைவேற்றப்பட் டது.

●

### குடியேற்றத்தில் பிரம்மாண்டமான கூட்டம்

ஏப். 11—

இம் மாதம் 6-ந் தேதி குடியேற் றம் ஆற்றில் பல கட்சிகளின் சார் பில் ஓர் பிரம்மாண்டமான கூட்டம் நடைபெற்றது.

திருவள்ளுவர் கழகத் தலைவர் தோழர் கண்ணன் கோவிந்தனார் தலைமை வகிக்க தோழர்கள் கண் ணன் (தி.க) ரங்கசாமி (தி. மு. க.) தனபால் (தா. சம்மே) அர்ஜுனன் (கம். க,) முதலியோர்களும் மற்றும் பல கட்சியினரும் காங்கிரஸ், ஜனநாயகத்திற்கு புறம்பாக நடந்து கொள்வதைப்பற்றி சொற்பொழி வாற்றினர்.

நீண்ட கரகோஷத்திற்கிடையே ராஜாஜி மந்திரிசபை அமைப்பை கண்டித்து தீர்மானம் நிறைவேற்றப் பட்டது.

●

### சத்திரப்பட்டி

தோழர் ஆர். சண்முகவேல் தலை மையில் கண்டன தினம் நடந்தது. தோழர் கார்க்கியின் புரட்சி கீதங் களுக்குப் பிறகு தோழர்கள் பாலு ஏ.எம். சாமி ஆகியோர் பேசினர் நெசவுத் தொழிலை அழிவிலிருந்து காக்கவேண்டுமெனவும், இராஜ பாளையம் கம்யூனிஸ்ட்கட்சி ஆபீசை இரவில் தாக்கியவர்கள் கடுமையாக தண்டிக்கப்பட வேண்டுமெனவும், பாலன் தூக்கிலிடப்படக்கூடாதென வும் தீர்மானம் நிறைவேறியது.

### தலைவாசல் முதலிய கிராமங்களில்

10–4–52ல் தலைவாசல், ஆரக ளூர், புத்தூர், வேப்பம் பூண்டி அகரம். புதூர், முதலிய கிராமங் களைச் சேர்ந்த விவசாயிகள் தலை வாசலில் கூடி தற்காலிகமாக பிர்க்கா விவசாயிகள் சங்கக் கமிட்டி ஒன்றை அமைத்தனர். இந்தக் கமிட்டிக்கு தோழர் எஸ் எஸ். மணி தலைவராக வும், புதூர் ந. தமிழ்வேள் செயலாள ராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். ஷை கூட்டத்தில் ஒவ்வொரு கிராமத் திலும் விவசாயிகள் சங்கம் ஏற் படுத்துவது எனவும் முடிவு செய்யப் பட்டது

●

### கூத்தாநல்லூர்

8-4-52ல் சாத்தானூர் ரேஞ்சு விவசாயிகளின் கூட்டம் நடைபெற் றது. 75 பிரதிநிதிகள் வந்திருந் தனர்.

அதில் தோழர் பி. வெங்கடே சன் எம்.எல்.ஏ. சங்க ரிப்போர்டை சமர்ப்பித்தார். பின்னர் 11 பேர் களைக்கொண்ட அமைப்புக் கமிட்டி ஏற்படுத்தப்பட்டது. தோழர் எஸ். டி. சம்பந்தம் கன்வீனராக தேர்ந் தெடுக்கப்பட்டார்.

# பஞ்சாயத்துபோர்டு தொழிலாளிகள் சங்கம் அமைத்தனர்!

இராமநாதபுரம், ஏப். 10—

இவ்வூர் பஞ்சாயத்து போர்டில் ஊழியம் பார்க்கிற அத்தனைபேரும் ஒன்று சேர்ந்து அவர்களது கோரிக் கைகள் நிறைவேற ஒரு யூனியன் ஸ்தாபித்துள்ளார்கள். அதன் தலை வர் ஸ்ரீ எ. கிருஷ்ணசாமி பி. ஏ பி. எல்., காரியதரிசி ஜனாப் காஸிம் சுல்தான்.

போர்ட் மேஸ்திரிகள், அட்டெண் டர்கள், தொழிலாளர்கள், வரிவசூ லிப்பவர்கள் அத்தனை சிப்பந்திகளும் இந்த யூனியனில் பதிவாகியுள்ளனர். ரிஜிஸ்டர் செய்வதற்கான ஏற்பாடும் த. நா. தொ. ச-கா. வுடன் இணைப்ப தற்கான ஏற்பாடும் நடைபெறு கிறது.

தொழிலாளரது ஐக்கியத்தைக் கண்ட ஸ்தல சி. ஐ. டியும், கி. அதி காரியும், நகரசுத்தித் தொழிலாளர் களது குடியிருப்புக்குச் சென்று, சங் கத்தைக் கலைத்துவிடுமாறும், அவசி யமானால் அவர்களே ஒரு சங்கம் வைப்பதாகவும் அதற்கு தாமே காரி யதரிசியாக இருந்து உழைப்பதாக ஏமாற்றுவார்த்தைகள் சொன்னதாக வும் தகவல்.

ஆனால் தொழிலாளிகள் வேலைப் பளுவை எதிர்த்தும், குறைந்தபட்ச வாழ்க்கைச் சம்பளத்திற்காகவும், வீட்டுவாடகை அலவன்ஸ், பஞ்சா யத்து எல்லைக்குள் குடியிருப்புவசதி, காஷுவல் லீவு, சிக் லீவு, பண்டிகை லீவு, வாரத்திற்கு ஒரு நாள் விடு முறை ஆகியவற்றிற்காகவும் உறுதி யுடன் போராட ஒன்று திரண்டுவரு கின்றனர்.

## தாழ்த்தப்பட்ட மக்களின் குடிசைகளை அகற்றாதே

சென்னை ராயபுரம் புதுமனை நக ரம் தாழ்த்தப்பட்டோர் முன்னேற் றக் கழகத்தின் பொதுக் குழுவின் கூட்டம் 13-4-52ல் நடைபெற்று கீழ்க்கண்ட தீர்மானங்களை நிறை வேற்றியது.

1. தாழ்த்தப்பட்ட மக்களின் குடி சைகளை சர்க்கார் அப்புறப்படுத்து வதை உடனடியாக சென்னை தலைமை அமைச்சரும் கவர்னரும் தலையிட்டு நிறுத்தவேண்டும்.

2. தாழ்த்தப்பட்ட மாணவர்கள் பரீட்சையில் தேறாவிட்டாலும் தொடர்ந்து உபகாரச் சம்பளம் கொடுக்கவேண்டும்; நிறுத்த கூடாது. ஹரிஜன நலஉரிமை இலாகாவிற்கு ஒரு தாழ்த்தப்பட்டவரையே டைரக்டராக நியமிக்கவேண்டும்.

3. பெருவாரியான தொழிற் சாலைகளிலும், சர்க்கார் காரியாலயங் களிலும், கடந்த 5 வருடமாக நீக்கப் பட்ட, உயர்வு கொடுக்கப்படாத தாழ்த்தப்பட்டவர்களுக்கு திரும்ப வேலை, உத்தியோக உயர்வுகொடுக்க வேண்டும்.

# ராமநாதபுரம்ராஜாவும், கபிலேஸ்வரம் ஜமீன்தார்களும் உழவர்களா?

## ஆச்சாரியார் வியாக்கியானத்திற்கு தோழர் நாகிரெட்டி சாட்டை

விஜயவாடா, ஏப். 12—

கபிலேஸ்வரம் ஜமீந்தாரையும், ராமநாதபுரம் ராஜாவையும் "உழவர்களென" நாக்கில் நரம்பில்லாமல் கூறுவதிலிருந்து ஆச்சாரியார் அமைச்சர்குழு ஜனங்களுக்கு என்ன நன்மை செய்யப்போகிறது என்பது தெளிவாகிறது என்று சென்னை சட்டசபை கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் தோழர் டி. நாகிரெட்டி அறிவித்துள்ளார்,

அவ்வறிக்கையின் விவரமாவது: கடைசியில் "ஆச்சாரியார் தனது அமைச்சர்களின் ஜாபிதாவை வெளியிட்டுவிட்டார். 15 பேர்கள்கொண்ட அமைச்சர் குழுவில் இருவர் ராஜாக்கள். அவர்கள் ராமநாதபுரம் ராஜாவும், கபிலேஸ்வரம் ஜமீன்தாருமாவர். நிலப்பிரபுக்களின காலடியின் கீழ் துவளும் விவசாயிகள் சம்பந்தமாக தலைமைஅமைச்சர் கடைப்பிடிக்கப்போகும் வருங்கால கொள்கைக்கு அது எடுத்துக்காட்டு. ஆந்திர கடற்கரை பகுதியிலுள்ள மக்கள் நிலச்சுவான்தார்களையும் அவர்களுடைய ஏஜெண்டுகளையும் பற்றி தெளிவாக தேர்தலில் எடுத்துக்காட்டிவிட்டனர். அப்படிப்பட்ட இடத்திலிருந்து நியமிக்கப்பட்டிருக்கும் அமைச்சர் ஒரு ஜமீன்தார். ஆச்சாரியாரின் கொள்கையையும் திட்டத்தையும் மக்களுக்குத் தெரிவிக்க இந்த ஒரு செயலே போதுமானதாகும்.

"மற்றப்படிக்கு ஆச்சாரியார் தன்னுடைய அமைச்சர் குழு நிறைவேற்றப்போகும் திட்டங்களைப்பற்றி ஒன்றும் சொல்லவில்லை. ஆயினும் தன்னைப்பற்றி கம்யூனிஸ்டுகளுடைய போக்கை அறிந்து கொள்ள அவர் ஆசைப்படுகிருர். குத்தகைதார்களின் பிரச்னைகள், பஞ்சப் பிரதேசம், நிலப்பிரபுகளின் கையிலுள்ள சர்க்காருக்குச் சொந்தமான 'பான்சர்' நிலங்கள், ஆந்திர மாகாண அமைப்பு, வரண்ட பகுதிகளில் நீர்ப்பாசன வசதி செய்தல், போன்ற பிரச்னைகள் சம்பந்தமாக அவருடைய போக்கை நாம் அறிய விரும்புகிரேம். இந்த அவசரமும், உடன் தீர்க்கப்பட வேண்டிய பிரச்னைகள் சம்பந்தமான அவருடைய போக்கை கொள்கையை வைத்தே எழுதவும் தீர்மானிக்கவும் முடியும். அப்போதுதான் ஒத்துழைப்பைப்பற்றி பேச வழியிருக்கிறது.

"முத்தையா செட்டியார் போன்ற பிற்போக்கு வாதிகளைத் தவிர பொதுவாக மக்கள், ஆச்சாரியார் மறுபடியும் தலைமை அமைச்சராக சென்னை அரசியலில் நுழைந்துள்ள முறையைக் கண்டிப்பதை அவர் தெரிந்திருப்பார். ஆகவே மற்றவர்கள் தன்னைப்பற்றி என்ன போக்கை கடைபிடிக்கப் போகிருர்கள் என்பதை கேட்பதற்கு முன்னர் மற்றவர்களைப்பற்றி, குறிப்பாக கிராமங்களிலும், நகரங்களிலும் உள்ள கீழ்த்தட்டு மக்களைப்பற்றி, தன்னுடைய போக்கு என்ன என்பதை தெளிவுபடுத்த வேண்டியது அவருடைய கடமை."

## ஆச்சாரியார் மந்திரிசபைக்கு இடதுசாரி சோஷலிஸ்டுகளின் கண்டனம்

சென்னை, ஏப். 12—

சென்னை ஜில்லா இடதுசாரி சோஷலிஸ்ட் கமிட்டி ஏப்ரல் 11ல் சென்னை திருவொற்றியூரில்தோழர் எஸ். எம். பாலசுந்திரம் தலைமையில் கூடிற்று. தோழர் பாலசுந்திரம் சென்னை ஜில்லா கமிட்டியின் செயலாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

ஜனநாயகத்திற்குப் புறம்பாகவும் மக்களின் தீர்ப்புக்கு விரோதமாகவும் சென்னைமீது காங்கிரஸ் மந்திரிசபை திணிக்கப்படுவதை வன்மையாகக் கண்டித்தும் "மூன்ரும் முகாம்" என்று கூறிக்கொள்ளும் வலதுசாரி சோஷலிஸ்டுகள் காங்கிரசுக்கு அனுசரணையாக இருப்பதை விளக்கியும் தீர்மானங்கள் நிறைவேறின.

# பொய்ச்சாட்சி சொல்லும்படி போலீஸ் சித்திரவதை செய்தது

## இராமநாதபுரம் சதிவழக்கில் குட்டு வெளியாயிற்று

[நமது நிருபர்]

இராமநாதபுரம், ஏப். 8—

இராமநாதபுரம் சதி வழக்கில் சர்க்கார் தரப்பு சாட்சி விசாரணை தொடர்ந்து நடந்து வருகிறது. போலீஸ் பயங்கரத்துக்கு பயந்தே சாட்சி சொன்னதாக, ஏப்ரல் 7, 8 தேதிகளில் விசாரிக்கப்பட்ட சர்க்கார் தரப்பு சாட்சிகள் இருவர் கோர்ட்டில் தெரிவித்துள்ளனர்,

சர்க்கார் தரப்பின் பதின்மூன்ரு வது சாட்சியாக ஏப்ரல் 7-ந் தேதி, மதுரை பாலகுரு என்பவர் விசாரிக்கப்பட்டார். அவர் தனக்கு கருப்பையாவையும், பைக் அழகரையும் மட்டுமே தெரியும் என்றும், வழக்கைப் பற்றி யாதொன்றும் தெரியாதென்றும் சொன்னர்.

உடனே "சாட்சி விரோதமாகத் திரும்பிவிட்டார்" என்று பிராசிகூஷன் தரப்பார் கூறி, குறுக்கு விசாரணை செய்ய கோர்ட்டில் அனுமதி பெற்றனர்.

கீழ்க்கோர்ட்டில், போலீசாரின் சித்திரவதையின் காரணமாக அவர்கள் சொல்லச் சொன்னபடியே சாட்சி கூறியதாக மதுரை பாலகுரு கூறினர். 1949ம் ஆண்டின் இறுதியிலும், 1950 தொடக்கத்திலும் மதுரையில் போலீஸ் அடக்குமுறை கடுமையாக இருந்ததென்றும், தன்னை மதுரை கிரைம் பிராஞ்சில் 14 நாள் வைத்து சித்ரவதை செய்தார்கள் என்றும், அவர்கள் சொன்னபடியே சாட்சி சொல்லாவிட்டால் தன்னையும் வழக்கில் மாட்டிவிடுவதாக பயமுறுத்தி, அதன் பின், 151வது செக்ஷன்படி தன்னை 14 நாள் ரிமாண்டில் வைத்திருந்த பிறகே விடுதலை செய்ததாகவும் அவர் தெரிவித்தார். விடுதலையான பிறகும் தாம் அடிக்கடி கிரைம் பிராஞ்சுக்கு அழைத்துச் செல்லப்பட்டதாகவும், அங்கு இன்ஸ்பெக்டர் அனந்தராமனும், வி ஐ. டி. இன்ஸ்பெக்டர் பாலசுப்ரமணியமும் பயமுறுத்திக்கொண்டேயிருந்தனர் என்றும் அவர் கூறினர். கீழ்க் கோர்ட்டில் சாட்சியம் கொடுப்பதற்கு ஒரு நாள் முன்னதாகவே, வி ஐ. டி. இன்ஸ்பெக்டர் பாலசுப்ரமணியம் தம்மை அவரது பாதுகாப்பில் வைத்துக்கொண்டதாகவும் அவர் தெரிவித்தார்.

வழக்கில் சாட்சியம் கொடுத்த விட்டல் ராவ் (மதுரை) என்பவரும், தன்னை 1950 ஆரம்பத்தில் மதுரை கிரைம் பிராஞ்சுக்கு 15 தினங்கள் வரை வந்து போய் இருக்கும்படி போலீசார் சொன்னர்கள் என்றும், இன்ஸ்பெக்டர் பாலசுப்ரமணியம் அந்நாட்களில் தன்னை விசாரித்ததாகவும் சொன்னர்.

மறுநாள் (8-4-52) ஷண்முக நாடார், குமரவேலு பிள்ளை, சுப்பா நாயுடு, சிதம்பரம் ஆகிய நான்கு சாட்சிகள் விசாரிக்கப்பட்டனர்.

சிதம்பரம் என்ற சாட்சி, தன் கையெழுத்திலிருப்பதாகச் சொல்லப்படும் ரிப்போர்ட்டு, போலீஸின் நிர்ப்பந்தத்தின் பேரில், கைது செய்து கொன்றுவிடுவதாக அவர்கள் பயமுறுத்தியதின் பேரில், போலீஸ் ஸ்டேஷனில் வைத்து எழுதிக் கொடுக்கப்பட்ட ரிப்போர்ட்டு என்றும், கீழ்க்கோர்ட்டில் 2-வது, 3-வது எதிரிகளாகிய கிருஷ்ணனையும், திருப்பத்தூர் ஷண்முகத்தையும் அடையாளம் காட்டியது போலீஸின் உதவியினுல் தான் என்றும், உண்மையில் அவர்களைத் தனக்குத் தெரியாது என்றும் அவர் தெரிவித்தார். மண்டபம் போலீஸ் கேம்பிலும், மதுரையிலுள்ள மாவட்டப் போலீஸ் ஸ்பெஷல் பிராஞ்சிலும், தன்னை வைத்துப் பயமுறுத்தியதின் விளைவாகவும் தன் தகப்பனுர் தமக்கையார், சுற்றத்தார் முதலியோர்களுடையவேலை போய்விடும் என்று மிரட்டியதின் விளைவாகவுமே, கீழ்க் கோர்ட்டில் போலீஸார் சொல்லிக் கொடுத்தபடி சாட்சி கூறியதாகவும், உண்மையில் வழக்கைப்பற்றியோ, எதிரிகளைப்பற்றியோ ஒன்றும் தெரியாது என்றும் அவர் சொன்னர்.

சர்க்காருக்கு விரோதமாக மாறிய முதலாவது அப்ரூவர் நல்லழகு என்பவரின் மனைவியார் தன் கணவரை மதுரை மத்திய சிறைக்கு மாற்றும்படி விண்ணப்பித்துக் கொண்டதை ஜட்ஜ் கோபால் அய்யர் அங்கீகரித்து, சாதகமான உத்திரவளித்தார். மனுதாரின் சார்பாக பிரபல வழக்கறிஞர் திரு தர்மராஜ் சந்தோஷம் ஆஜரானுர்.

# நெல்லிக்குப்பம் பாரி தொழிலாளர் அவதி!

## வெள்ளை முதலாளிகளின் பகாசுர சுரண்டல்!

நெல்லிக்குப்பம், ஏப்ரல் 11—

*1950—51* பருவ வருடத்தில் நெல்லிக்குப்பம் தொழிற்சாலையில் இந்தியாவில் வேறெந்த தொழிற்சாலையைக் காட்டிலும் அதிகமான அளவு கரும்பு பிழிந்து அதிகமான அள்வு சர்க்கரை உற்பத்தி செய்யப்பட்டுள்ளது" என்று பத்திரிகைக்கு விடுத்த அறிக்கையில் (5-4-52 'சுதேசமித்திரனில்' வெளிவந்துள்ளது) தங்களது ஒப்புயர்வற்ற சுரண்டலை பெருமைப்படுத்திக் கொள்கிருர் பாரிகம்பெனி டைரக்டர் மிஸ்டர் ஒன்பர்.

இந்தியாவில் வேறெந்த தொழிற்சாலையிலும் நெல்லிக்குப்பம் ஆலையில் கொடுக்கப்படும் கூலியைவிடக் குறைவாகக் கொடுக்க முடியாது என்பதை அவர் சொல்லவில்லை! அந்த அளவிற்குக் "தாராள மனப்பான்மையுடன்" அள்ளி அள்ளி கொடுக்கிருர்கள் பாரி கம்பெனியார்!

அதிகமான சர்க்கரை—அதிகமான லாபம், அதிகமான கொள்ளை! தினம் 2000 மூட்டை சர்க்கரை (2 அந்தர் மூட்டை) உற்பத்தியாகும் இந்த கரும்பு ஆலையில் வேலைசெய்யும் தொழிலாளிகளுக்கு சராசரி தினக்கூலி 0-15-0 முதல் 1-1.0. 40 வருஷம், 45 வருஷம் வேலை செய்துள்ள தொழிலாளர்களும்கூட 1-3-0 முதல் 1-8-0 கூலி பெறுவது கடினம்.

### கரும்புஆலை கடும்நரகம்

இங்கு, கரும்பைச் சாறுபிழிந்து சர்க்கரை செய்யும் ஷுகர் ஹவுஸ் டிபார்ட்மெண்ட் நடவடிக்கை ஒரு கொடிய நரகம் எனலாம். 200–220 டிகிரி ஸ்டீமில் கடும் வெய்யிலிலும் இரவிலும், எட்டு மணி நேரம் தொடர்ச்சியாக வேலை செய்யும் தொழிலாளிக்கு எந்தவித சௌகரியமும் கிடையாது. எவாப்பரேடர் செக்ஷனில் வேலைசெய்யும் தொழிலாளர்களின் தொல்லைகள் வர்ணிக்கவே முடியாது

சல்லடையில்வேலைசெய்யும் சுமார் 100 தொழிலாளர்கள் நிலை மிகவும் பரிதாபகரமாயுள்ளது அவர்களுக்கு உடுப்பு வசதியென்பதே கிடையாது இந்த பதினுறு அணு தினக்கூலியில் அவர்கள் உடுப்பு எங்கிருந்து வாங்குவார்கள்? வேலையோ, அந்த சல்லடை மிஷின் சுற்றுகிற வேகத்தோடு இவர்களும் சுற்றவேண்டும். அரை நிமிஷம்கூட அசாமுடியாது. எட்டு மணி நேரமும், நெட்ட நெடு மரம்போன்று மிஷினேடு போராட வேண்டும்.

எனக்கும் என் எஜமானருக்கும் சம்பளம் ரூ. 500. எனக்கு ரூ. 20. மீதி எஜமானருக்கு. அதே அறிக்கையில் மிஸ்டர் ஒன்பர், 1950-51 வருட வருமானவு சிலத்தில் வகையைக் குறிப்பிடும்போது 81 சதவீதம் கூலி, சம்பளம், பஞ்சப்படி, தொழிலாளர் போனஸ், பிராவிடண்டு பண்டு நிதி, பென்ஷன் போன்ற வசதிகளுக்காக செலவிடப்பட்டுள்ளதாக சொல்கிருர். இந்த 8·1 சதவிகிதத்தில், எத்தனை சதவீதம் வெள்ளைக்கார உத்யோகஸ்தர்களுக்கு என்றும், எத்தனை சதவிகிதம் இதர உத்யோகஸ்தர்களுக்கு என்றும், தொழிலாளர்களுக்கு எத்தனை சதவிகிதம் என்றும் ஏன் விளக்கிக் கூறவில்லை? அப்போது அம்பலமாகி விடும் தொழிலாளிக்கு சராசரி போனஸ் ரூ 80 விருந்து 100ம், பாக்டரி வெள்ளைக்கார இன்ஜினீருக்கு ரூ 48,000ம், ஐம்பதாயிரம் என்பதும், ஷுகர் ஹவுஸ் துரையாகிய ஒரு வெள்ளைக்கார அதிகாரிக்கு ரூ.42,000 இப்படியாக, தொழிலாளிக்கும் ஆபீசர்களுக்கும் சேர்த்து 8·1 சதவிகிதம் என்று கதை அளக்கிருர் மிஸ்டர் ஒன்பர்.

"மிட்டாய் செய்யும் தொழிலில் திருப்திகரமான முன்னேற்றம் காணப்படுகிறது; உற்பத்தி அளவு முன்வருடத்தைவிட 42 சதம் அதிகம்; விற்பனையும் லாபமும் மிக அதிகம்" என்று ஒப்புக்கொள்கிருர் மிஸ்டர் ஒன்பர். ஆனல் அதே மிட்டாய் கிடங்கிலுள்ள 25 வருஷம் சர்வீஸ் தொழிலாளர்களுக்கு 1-2-0 கூலி!

தொழிலாளிக்கு வேலை உத்திரவாதம் என்ற பேச்சே இந்த ஆலையில் கிடையாது. பெப்ரமெண்டு முறை மிக மிகக் கடுமையானது. தொழிலாளியின் கழுத்தின்மேல் சதா தொங்கிக்கொண்டிருக்கும் கூர்மையான கத்தி இது. எந்த நிமிஷத்திலும் பட் என்று விழுந்துவிடும். அதோடு சரிதான் அவனது நாற்பது வருஷ உழைப்பு

பாரி கம்பெனியின் மானேஜ்மெண்டின் கீழ் புகலூரிலும் (திருச்சி ஜில்லா), ராணிப்பேட்டையிலும், சாமல்கோட்டை (ஆந்திரா)யிலும் பம்பா ஆற்றிலும் (திருவாங்கூர்) நெல்லிக்குப்பத்திலும் உள்ள ஆலைத் தொழிலாளர்கள், கரும்பு விவசாயிகள் அனைவரும் ஒன்றுபட்டு, கோரிக்கைகள் வகுத்து, போராடி வருவதைத் தவிர வேறு வழியில்லை ஒவ்வொரு ஆலையிலும் தொழிலாளர்களுக்கு மிகக் குறைந்த கூலி, கொள்ளைலாபம், அபரிமிதமான வெள்ளைக்கார உத்யோகஸ்தர்கள், பங்களா, கார்வசதி உட்பட நூற்றுக் கணக்கிலும் ஆயிரக் கணக்கிலும் மாதச் சம்பளம் பெறுவது, இவையெல்லாம் எதிர்த்து, வாழ்க்கைச் சம்பளத்திற்காகவும், வீட்டு வசதிக்காகவும் இன்னும் ஜீவாதாரமான பல பிரச்னைகளுக்காகவும் கரும்பு விவசாயி — ஆலைத்தொழிலாளி ஒன்றுபட்ட போராட்டம் ஆரம்பிக்க வேண்டும்.

—பி. புருஷோத்தமன்,
நெல்லிக்குப்பம் தொ. ச. காரியதரிசி.

# கட்சிக் காரியாலயத்தின் மீது காங்கிரஸ் குண்டர்கள் தாக்குதல்

## இராஜபாளையத்தில் காலிகள் அட்டகாசம்

இராஜபாளையம். ஏப். 8—

இராஜபாளையம் கம்யூனிஸ்ட்கட்சி காரியாலயத்தின் மீது ஏப்ரல் 6-ம் தேதி இரவு இரண்டு மணிக்கு குண்டர்கள் படையெடுத்து சேதம் செய்தனரென்று செய்தி வந்துள்ளது.

இராஜபாளையம் மில் ஷிப்டு கூட்டத்திற்காக கட்சி காரியாலயத் தோழர்கள் அன்றிரவு 12½ மணிக்கு மேல் காரியாலயத்தைப் பூட்டிவிட்டு மில்லுக்குச் சென்றிருந்த பொழுது 50 பேருக்கு மேற்பட்ட காங்கிரஸ் குண்டர்கள் கையில் கம்புகளுடன் வந்து, காரியாலத்தின் கீழ்புறமுள்ள புளிய மரத்தில் பறந்துகொண்டிருந்த செங்கொடியை இறக்கிவிட்டு, காரியாலய கேட்டை உடைத்து கதவைக் கீழே தள்ளிவிட்டு, இரண்டாவது கதவையும் உடைத்துக்கொண்டு உள்ளே சென்று அங்கிருந்த சைக்கிளையும் ரிகார்டுகளையும் தூக்கி வெளியே எறிந்தனர். காரியாலயத்தில் பறந்து கொண்டிருந்த செங்கொடியையும் கிழித்தெறிந்தனர். தொழிற் சங்க ரிஜிஸ்திரேஷன் போர்டையும் மின்சார பல்புஒன்றையும் எடுத்துக் கொண்டு போய்விட்டதாக தெரிகிறது.

காரியாலயம் தாக்குண்ட செய்தி கேட்டு மில்லுக்குச் சென்றிருந்த தோழர்கள் திரும்புவதற்குள், காலிகள் போய்விட்டனர்.

இதே காலிகள் ஏப். 4-ல் சம்பந்தபுரம் பெரிய சுரைக்காய் பட்டியில் ஒரு செங்கொடியைக் கீழே இறக்கிக் கிழித்தெறிந்தனர். காலிகளின் அட்டகாசம் மக்களிடையே கொதிப்பை உண்டுபண்ணி வருகிறது.

## திருத்தம்

ஜனசக்தி வெளியூர் 28-3-52 இதழில் 3-வது பக்கத்தில் 2-வது பத்தியில் "சோஷலிஸ்டுக் கட்சி கரைகிறது" என்ற தலைப்பில் ஈ. சீனுவாசன் என்பவர் ராஜிநாமா செய்து விட்டதாக வந்த செய்தி தவறு என அறிவித்துக்கொள்கிரேம். தவறுக்கு வருந்துகிரேம்.

## மெய்யந்தெருவில் கை. நெ. தொழிலாளர் மகாநாடு

சிவதாபுரம், ஏப். 10—

இவ்வூருக்கு அருகாமையிலுள்ள மெய்யன்தெரு என்ற கிராமத்தின் கைநெசவுத் தொழிலாளர் சங்கத்தின் ஆண்டு விழா 3-4-52 அன்று விமரிசையாக நடந்தது. தோழர் சட்டையன் தலைமை வகித்தார்.

பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. புது ஆண்டுக்கு நிர்வாகஸ்தர்களும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

Edited, Printed & Published by G. Alavandar, At Janasakthi Press, 80-A, Singanna Chetty Street, Chintadripet, Madras-2. REGD. No. M. 5934